[5th September 1960

*Ex-gratia payments to Gazetted Officers*

* 417 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri V. K. KOTHANDARAMAN) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether there is any scheme for granting ex-gratia payments to Gazetted Officers whose deaths occur during their service; and

(*b*) if so, the names of such officers who were granted such amounts since 1957?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) A statement[a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : இந்தப் பணம் 18 பேர்களுக்குத் தரப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. அந்தத் தொகை எவ்வளவு என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I do not have the figures with me.

*Fertilizer*

* 418 *Q.*—P. G. SRI MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960–61-ஆம் வருஷத்துக்கு மத்திய சர்க்காரிடம் நம் மாகாண சர்க்கார் கோரிய இரசாயன உரத்தின் அளவு எவ்வளவு ?

(ஆ) கிடைத்த அளவு எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A statement[b] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஸார், மேஜை மீது வைக்கப்பட்டிருக்கும் குறிப்பில் அம்மோனியம் சல்பேட்டானது 1,45,000 டன் அளவு கேட்டதற்கு 10,000 டன்தான் கொடுத்திருக்கிறார்கள். மற்றனவகளும் மிகக் குறை வாகவே கொடுக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் அதிக அளவு கொடுக்க வேண்டுமென்று மீண்டும் நமது சர்க்கார் இந்திய சர்க்காரை வற்புறுத்து வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 1960–61-ம் ஆண்டுக்கு எவ்வளவு கேட்டிருக்கிறோம் என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது 10,000 டன் வந்திருக்கிறது. கேட்ட அளவு கொடுப்பது சாத்தியமில்லாவிட்டாலும் எவ்வளவு தூரம் சாத்தியமோ அவ்வளவு தூரம் வெளிநாடுகளிலிருந்துகூட தருவித்துக் கொடுப்பார்கள்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த அம்மோனியம் சல்பேட் டானது கேட்ட அளவைவிட மிகவும் குறைவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்படிக் குறைவான அளவு கொடுக்கப்படுவதும் சரியானபடி காலா காலத்தில் பயிரிடுவதற்கு உரிய காலத்தில் கொடுக்கப்படுவதில்லை. அதே போல் "பாக்கேஜ் ஸ்கீமுக்கும்" உரிய காலத்தில் கொடுக்கப்படுவதில்லை. இதை அதிக அளவில் காலா காலத்தில் கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பே விடையளித் தேன். கேட்டது ஒரு வருஷம் பூராவுக்கும். 1960–61-க்கு கேட்டதில் ஓரளவு வந்திருக்கிறது. கேட்ட அளவுக்கு வராவிட்டாலும் கூடியவரை எவ்வளவு முடியுமோ அவ்வளவு வாங்க முயற்சி செய்கிறோம். "பாக் கேஜ் ஸ்கீம்"-க்கு குறைவு ஒன்றுமில்லை. வேண்டிய அளவுக்கு உரம் தஞ்சை ஜில்லாவில் கொடுக்கப்படுறகிது.

---

a Printed as Appendix I on page 112 infra.
b Printed as Appendix II on page 113 infra.

5th September 1960]

SRI M. D. THIAGARAJA PILLAI : தஞ்சை ஜில்லாவில் உரங்களின் விலை நிர்ணயிக்கப்படாததனால் அவை மற்ற கிராம சொஸைடிகளுக்கு அனுப்பப்படாமல் இருக்கின்றன. அதன் விலையைச் சீக்கிரமாக நிர்ணயம் செய்து மற்ற சொஸைடிகளுக்கு அனுப்ப ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு புகார் ஒன்றும் வரவில்லை.

SRI J. MATHA GOWDER : ஸார், இந்த உரம் கேட்ட அளவுக்குக் கொடுக்கப்பட மாட்டாது என்றாலும் கூட இந்த மாநிலத்தின் சுய தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய அளவுக்காவது கிடைப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதெல்லாம் உத்தேசமாகத்தான் சொல்ல முடியும். எவ்வளவு கிடைக்குமென்று நிச்சயமாகச் சொல்ல முடியாது.

SRI A. GOVINDASAMY : அமைச்சர் அவர்கள் சொல்கின்றபோது, "கேட்ட அளவு கிடைக்குமென்று சொல்ல முடியாது" என்று அவரே பதில் சொல்லும்போது சொல்கின்றார். அப்படியானால் கேட்ட அளவு கிடைக்கக்கூடாது என்பது அமைச்சர் அவர்களுடைய நோக்கமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் குழப்பம் என்னவென்று தெரியவில்லை. என் மனதில் ஒன்றும் குழப்பம் இல்லை.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the co-operative societies in North Arcot district have not yet been supplied with fertilizers for distribution, and if so, may I know the reason for it?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : We are distributing these fertilizers only through the co-operative societies and whatever quantity is allotted to the North Arcot district, the co-operative societies in that district alone would distribute it.

SRI N. R. THIAGARAJAN : இந்த அமோனியம் சல்பேட் இந்தியாவில் எவ்வளவு உற்பத்தியாகிறது ? வெளி நாடுகளிலிருந்து எவ்வளவு இறக்குமதி செய்யப்படுகிறது ? எந்த அடிப்படையில் ஒவ்வொரு மாகாணத்திற்கும் பிரித்துக் கொடுக்கிறார்கள் ? நம்முடைய மாநிலத்திற்குச் சரியான அளவு கொடுக்கப்படவில்லையென்றால் அதற்குக் காரணம் என்ன ?

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் நான்கு கேள்விகளை ஒரே சமயத்தில் கேட்டுவிட்டார்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவு உற்பத்தியாகிறது, எவ்வளவு இறக்குமதியாகிறது என்ற புள்ளி விவரங்கள் என்னிடம் இல்லை. ஆனால், எல்லா ராஜ்யங்களும் சேர்ந்து 39 கோடி ரூபாய்க்கு இந்த உரம் கேட்கிறார்கள். எவ்வளவு தூரம் அந்நிய நாட்டுச் செலாவணி கிடைக்கிறதோ அந்த அளவுக்கு இறக்குமதி செய்யப்பட்டு எல்லா ராஜ்யங்களுக்கும் பகிர்ந்து கொடுக்கப்படுகிறது.

[5th September 1960

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, in the recent Agricultural Ministers' Conference held at New Delhi it seems that the Union Minister said that he would have to export sugar to earn more foreign exchange in order to get more fertilizers. Is it with a view to augmenting the supply to the Tamil Nad?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. The Union Minister proposes to export about five lakhs tons of sugar and he has settled with the Finance Ministry that all the foreign exchange earned through the export of agricultural commodities must be exclusively reserved for the import of fertilizers from other countries. The Union Minister pointed out that during the last year oil-cakes were exported to the extent of 14 crores of rupees, but subsequently that amount was not allotted for the import of fertilizers but that the Finance Ministry had now agreed to let the entire amount for the import of chemical fertilizers.

SRI P. G. MANICKAM : ஸார், இவ்வாறு வருஷந்தோறும் நமக்கு ஒதுக்கப்படும் அளவானது மிகக் குறைவாக இருப்பதால் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது இரசாயன உரத் தொழிற்சாலை ஒன்றை இங்கு ஏற்படுத்த நமது சென்னை சர்க்கார் இந்திய சர்க்காரை வற்புறுத்துவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் புதிய உரத் தொழிற்சாலை நிறுவப்படும். ஆனால் நம்முடைய தேவை முழுவதுக்கும் அந்தத் தொழிற்சாலையிலிருந்து எதிர்பார்க்க முடியாது.

SRI A. VEDARATHNAM : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் அளித்த பதிலிலிருந்து இங்குள்ள பிண்ணாக்கை ஏற்றுமதி செய்து அதற்குப் பதிலாக "பார்டிலைசரை" இறக்குமதி செய்வதாகச் சொன்னார். பிண்ணாக்கே நல்ல உரம். கால் நடைகளுக்கும் அது பயன்படுகிறது. அதை வெளிநாடுகளுக்கு அனுப்புவதனால் இங்கு கால்நடைகளுக்குத் தீனி குறைந்த விலையில் கிடைக்க முடியாது. ஆகவே, இதன் ஏற்றுமதியைத் தடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பிண்ணாக்கு பூராவையும் அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவில்லை. ஓரளவு ஏற்றுமதி செய்வதன் மூலம் நமக்கு அந்நியநாட்டுச் செலாவணி 14 கோடி ரூபாய் கிடைக்கிறது. அந்தப் 14 கோடி ரூபாயும் இரசாயன உரங்களை இறக்குமதி செய்யப் பயன்படுத்தப்படுகிறது.

*Madras Pay Commission's recommendations*

* 419 *Q.*—SRI N. K. PALANISAMI :<br>SRI A. A. RASHEED :<br>SRI N. R. THIAGARAJAN : } Will the Hon. the Minister for Finance be pleased to state whether any financial assistance has been promised by the Centre to implement the recommendations of the Madras Pay Commission?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

(Sri N. K. Palanisami rose.)

MR. SPEAKER : What is the hon. Member going to ask when the Hon. Minister says 'no' to the question originally put?